<u>வாழப் பிறந்தோம்: தொடர்ச்சி:</u>

" பணத்தை மதிப்பிடுவதும் அவசியம்: பணம்தான் உலகம்; ஆகையால் உலக அநுபவம் வேண்டும். நாட்டு நடப்புத் தெரிந்திருக்கவேண்டும். இதற்கு மொழி அறிவு வேண்டும். எதிரியின் பேச்சைக் கண்டு, உடையைக் கண்டு ஆடம்பர படாடோபங்களைக் கண்டு கருத்திழந்து அவன்பால் சாய்ந்து விடக் கூடாது. + + +

" உலகம் தோன்றிய நாள் தொட்டு மனிதனுடைய உயிரோடு உயிராய், உணர்வோடு உணர்வாய், என்பும் சதையுமாய், பாலோடு ஊனுடையாய், மாற்று விட முடியாதபடி பின்னிப் பிணைந்து வருவது வறுமை. உலகத்திலுள்ள தீய சக்திகளுக்கெல்லாம் தாயாயது வறுமை. மனிதனுக்கும் வறுமைக்கும் சதாகாலமும் ஓய்வு ஒழிவு இல்லாமல் சண்டை நடந்துகொண்டே யிருக்கிறது. முடிவற்ற இந்தச் சண்டைதான் மனித வாழ்க்கையின் உயிர் நாடி" + + +

" வறுமை என்பது வறண்ட நிலை. இருந்தது இல்லாமற் போய் விட்ட நிலை. அதாவது, இன்மையாகும். இன்மைக்கும்; உண்மைக்கும்; இல்லாதவனுக்கும் இருப்பவனுக்கும் நடக்கும் போராட்டம்தான் மனித வாழ்வின் சரிதை" + + +

" வறுமையோடு எதிர்த்துப் போராடமுடியாமல்; அதனிடம் நெஞ்சு நொந்து சரணாகதி யடைந்துவிடுகிறவன் பட்டினியால் செத்துப் போவான்". + + + வறுமையை வென்று தப்ப ஆவதற்கே நாம் வெல்லவேண்டும். வறுமை மகா பொல்லாதது. நம்மைத் தூக்கித் தூக்கி யடிக்கும். அதன் பிடியிலிருந்து தப்பியவர்களே மனிதர்கள்". + + +

" செலவுக்கு வேண்டிய பணம் இல்லாமை யிருப்பதுதான் வறுமை நிலை என்று எண்ணவேண்டாம். தேவையைப் பூர்த்தி செய்து கொள்ள முடியாமை யிருப்பதுதான் வறுமை நிலை". + + +

" ஐயோ!, பணமில்லையே, என்று ஏங்க வேண்டாம். எழுந்து நின்று மல்லாடுங்கள்; உழையுங்கள். வழி கண்டுபிடியுங்கள். திறமையை வெளி வேகத்தில் [illegible]. கஷ்டப்படுங்கள். தியாகம் செய்யுங்கள். லட்சியத்தை மட்டும் எப்பொழுதும் கூட மறந்து விடாதீர்கள். பணக்காரன் மகன் பணக்காரனாக இருக்கிறவனைவிட, வறுமையின் பெருமையை உணர்ந்து படிப்படியாக உயர்ந்திருக்கிறவனுக்குத்தான் வாழ்வின் ரசங்களை ரசித்துச் சுவைக்கிற தகுதியுண்டு." + + +

" வறுமை கொடியதுதான். ஆனால், அதைக் கண்டு அஞ்சக்கூடாது. வறுமையின் பெருமையை உணர்ந்து, அதனோடு போராடி வெற்றி பெறவேண்டும். ஏன்? வறுமையால் தானே வாழ்வு இனிக்கிறது !

" தோற்றம் என்பது பல உருவங்களைக் கொண்ட ஓர் அபூர்வ சக்தி. இது இரண்டு வகைப்படும். (1) அகத் தோற்றம். (2) புறத் தோற்றம். அகத்தோற்றம் மீண்டும் இரண்டு வகைப்படும். (1) அறிவுத் தோற்றம். (2) உணர்ச்சித் தோற்றம்." + + +